18th August 1961]

SRI M. K. SOMASUNDARAM : இந்த ஸ்தாபனத்தின்கீழ் ஒவ்வொரு கிராமத்திலும் நடைபெற்று வரும் லைபரரிகளை மேற் பார்வையிடுவதற்கு மேற்பார்வையாளர்கள் நியமிக்கப்பட்டிருக் கிறார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அடிக்கடி இவைகளிலுள்ள கணக்குப் பரிசீலனை செய்யப்படுகிறது. ஜில்லா அரிஜன நல அதிகாரிகள், டைரக்டர், உதவி டைரக்டர் இவர்களாலும் கவனிக்கப்பட்டு வருகிறது.

SRI P. G. MANICKAM : ஸார், தாழ்த்தப்பட்டோர் லீக்-க்கு மத்திய அரசாங்கத்திலிருந்து ஏதாவது உதவி கிடைக்கிறதா ? அப்படியானால் ஆண்டு தோறும் எவ்வளவு கிடைக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : மத்திய அரசாங்கத்திலிருந்து கிடைக்கின்ற விவரம் இப்போது என்னிடமில்லை. இருந்தாலும் அகில இந்திய டிப்ரஸ்ட் கிளாஸ் லீகிலிருந்து கிடைக்கின்ற உதவி இந்த ராஜ்யத்திற்கு பயன்படுத்தப்படும்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : ஸார், இம்மாதிரியான லைப்ரரிகள் ஜில்லாதோறும் எத்தனை எத்தனை இருக்கின்றன என்கின்ற புள்ளிவிவரத்தைத் தரமுடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : இந்தத் தகவல் இப்போது என்னிடமில்லை.

*Bus routes to Sathanur Dam*

* 1229 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா-

திருவண்ணாமலையிலிருந்து சாத்தனூர் அணைக்கட்டுக்கும், திருப்பத்தூரிலிருந்து சாத்தனூர் அணைக்கட்டுக்கும் உள்ள பல பஸ் ரூட்டுகளில் பஸ்களை அதிகப்படுத்த உத்தேசமுண்டா ?

THE HON. SRI V. RAMAIAH : Yes, Sir. So far as transport facilities between Tiruvannamalai and Sathanur Dam are concerned. As regards Tirupathur and Sathanur Dam, the existing transport facilities are considered to be quite adequate.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், சாத்தனூர் அணைக் கட்டுக்குப் போக்குவரத்து அதிகமாகிக் கொண்டிருக்கின்ற காரணத்தாலும், அந்த ரூட்டுகளில் பஸ்கள் குறைவாக இருக் கின்ற காரணத்தாலும், அந்தப் பாதையில் போகின்ற பஸ் களில் அதிகமான அளவில் பிரயாணிகளை ஏற்றிக்கொண்டு போகிறார்கள். இந்த விவரங்கள் அமைச்சர் அவர்களுக்குத் தெரியும் என்று நம்புகிறேன். ஆகவே இதைத் தடுப்பதற்காகவும், சர்க்காருடைய வருமானத்தை பெருக்கவும் இந்தப் பாதையில் அதிகமான பஸ்களை விடுவதற்கு கனம் அமைச்சர் அவர்கள் கவனம் செலுத்துவார்களா ?

[18th August 1961

THE HON. SRI V. RAMAIAH : திருவண்ணுமலை—சாத்தனூர் பாதையில் இன்னும் அதிகமான பஸ்களை விட வேண்டும் என்று ரீஜனல் டிரான்ஸ்போர்ட் அதிகாரி நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிருர்கள். முக்கியமாக ஞாயிற்றுக்கிழமை போன்ற விடுமுறை நாட்களில் அதிகமான அளவில் பிரயாணிகள் அங்கு போய் கொண்டிருக்கிருர்கள். அந்த நாட்களில் இப்போது இருப்பதை விட கூடுதலாக எக்ஸ்ட்ரா டிரிப் விடுவதற்கு முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிருர்கள்.

SRI V. SUBBIAH : ஸார், கிராமங்களில் அதிகமான பஸ்களை விடுவதற்கு ஏதாவது திட்டமிருக்கின்றதா? அப்படியானல் எந்தெந்த ஜில்லாக்களில் எத்தனை பஸ்கள் விடப்படும் என்பதைத் தெரிவிக்க முடியுமா?

DEPUTY SPEAKER : The hon. Member may put a separate question.

*Marketing Committees (paddy)*

* 1230 Q.—SRI A. VEDARATHNAM (on behalf of SRI A. R. MARIMUTHU) : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லாவில் விளையும் நெல், நிலக்கடலை போன்ற தானியங்களின் விற்பனையை விவசாய விளைபொருள் விற்பனைச் சட்டத்திற்கு உட்படுத்தி, மார்க்கெட்டிங் கமிட்டிகள் ஏற்படுத்த சர்க்காருக்கு உத்தேசமுண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir.

*Tamil Script*

* 1231 Q.—SRI A. A. RASHEED (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to reform the Tamil script.

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI A. A. RASHEED : Sir, is there any proposal to popularise Tamil through the Roman script?

THE HON. SRI C. SUBRAMANIAM : This does not arise out of the main question.

*Food Zones*

* 1232 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to abolish food zones?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.